# திருநெல்லை

ஆன்மீகத் திங்களிதழ்



விஜய – மாசி – 2014 – பிப்ரவரி

பழனி பாதயாத்திரைக் குழுவினருக்குக் கோவிலூர் மடாலயம் சார்பில் நடைபெற்ற அன்னதான நிகழ்ச்சி (சத்திரப்பட்டி)

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

விஜய - மாசி - 2014 - பிப்ரவரி இதழ் - 20

சிறப்பாசிரியர் :
சீர் வளர் சீர்
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்).
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G, ஜவஹர் தெரு, நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

### பொருளடக்கம்



தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00

உ
சிவமயம்

# இறை வணக்கம்

## நலமெல்லாம் சூழ்க !

மாசற்ற கோவிலூர் மங்கை – திரு
மாலுக்குப் பின்வந்த தங்கை
பாலன்ன மொழியாளைப் பார்ப்பீர் – அவள்
பாதத்தில் இருகையைச் சேர்ப்பீர்
வேலன்ன விழிமாதைக் காண்பீர் – சிவன்
விரும்புமிரு தோளிலணி பூண்பீர்
தேவாரம் கேட்கின்ற காது – அதில்
தினந்தோறும் தேன்தமிழை ஓது




கொற்றவாள் ஈசருடன் கூடி – அவள்
கொடுப்பாளே பக்தருக்குக் கோடி
கோதிலறம் வளர்க்கின்ற ஊரைப் – பாரும்
கொண்டாடும் விழாவினது சீரை
ஆடியிலே இவளுடைய தேரு – அது
ஆடியே ஓடுவதைப் பாரு
தேனாறு பாய்கின்ற ஊரு – அதன்
தேவியாம் திருநெல்லை பாரு

பாண்டியனார் கட்டிவைத்த கோயில் –அங்கே
பரந்திருக்கும் கோபுரத்தின் வாயில்
பண்புள்ள வேதமுனி யானோர் – பலர்
படிப்பதனைப் பார்க்கின்ற வானோர்
வன்னிவனம் என்றிதனைச் சொல்வார் – நெல்லை
வாசலிலே வந்துவினை வெல்வார்
கன்னியிவள் ஆடுகிற ஊசல் – வந்து
காணலாம் கோயில்மணி வாசல்

ஆண்டவரும் வழிபட்ட நாளில் – பக்தி
அதுமீறி விழுந்தாரே தாளில்
வன்னிவனம் கோவிலூர் ஆகச் – செய்து
வழிபட்டார் மக்கள்பல ராக
வானுலவு தேவர்களும் வந்தார் – அவர்
வகைவகையாய்ப் பூக்கொண்டு தந்தார்
அழகான திருநெல்லை வாழ்க ! – அவள்
அருளாலே நலமெல்லாம் சூழ்க !

காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர் .நா. மீனவன்

# ஆசியுரை

### சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்

நன்னெறி வாழ்க்கைக்கு முதல் அடிப்படைப் பண்பு பெற்றோரை மதித்தல், அன்புபாராட்டுதல், தாய் தந்தையை மதித்துப் போற்றுதல், வேண்டுங்காலத்து உதவியாக இருத்தல். தாய் தான் உன்னை இந்த உலகிற்கு அறிமுகப்படுத்தியவள், அழைத்துவந்தவள், அவள் மடியிலும் மார்பிலும் தோளிலும் படுத்துத் தான் நீ வளர்ந்தாய், அவள் அளித்த பாலும், பழமும், உணவும், அறிவும் தான் உன் உடல் உன் உயிர். "கண்ணா! அப்பாவைப் பாருடா! அய்! எப்படிச் சிரிக்கிறான் பாருங்க" என்று உன் தந்தையை உனக்கு அறிமுகப்படுத்தியவள். அவள் கைப்பிடித்துத்தான் நடைபழகினாய், ஓடப் பழகினாய், தாவப்பழகினாய். தாயின் பெருமை பேசாத மொழியில்லை; பாடாத கவிஞன் இல்லை. அன்பு செலுத்தி அரவணைக்கத் தாயும் அன்புடன் கண்டித்து வளர்க்கத் தந்தையும் அவசியம். அப்படி வளர்த்தவர்கள் தான் நாம் யாவரும். உலகில் முதலில் உணர்ந்த உறவு தாய் ; அறிந்த உறவு தந்தை. எனவே தான் "அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்" என்றாள் தமிழ்ப்பாட்டி. "மாதா பிதா குரு தெய்வம்"; மாதா முதல் தெய்வம்; பிதா இரண்டாவது . பின்னர் தான் குரு. இவர்கள் எல்லாரும் சொல்லியும் அறிவுறுத்தியும் அறிந்து உணர்ந்ததுதான் இறைவன், பக்தி என்பதெல்லாம்.

அன்னையும் தந்தையும் பிள்ளைகளை அன்புகாட்டி அரவணைத்து நல்லுரைகள் கூறித் தேவையானால் கண்டித்து வளர்த்தால் தான் பிள்ளைகள் நல்ல முறையில் அன்பு, பாசம், பொறுப்புணர்வு, கடமை ஆற்றல் எனத் தெளிவாகவும் திறமாகவும் வளர்வார்கள் ; நாட்டுக்கும் வீட்டிற்கும் பயன் ஏற்படும்.

இல்லாமல் தனிப்படுத்தப்பட்ட பெற்றோர் ஒருவராலே – தாயோ தந்தையோ – வளர்க்கப்படும் குழந்தைகள் உளவியற் குறைகள் பல

உடையவர்களாக வளர்கிறார்கள். குழந்தைகளிடம் கவனம் செலுத்தாமல் காசின் மேல்மட்டும் கவனம் கொள்கின்ற பெற்றோர்களின் குழந்தைகளும் இத்தகைய குறைபாடுகட்கு ஆட்பட்டுத் தெளிவு இழந்து மனம் போனபடி வாழ்ந்து தவிக்கிறார்கள். இதனை உணர்ந்து பெற்றோர்கள், அவசியத்தின் காரணமாக இருவரும் வேலைக்குப் போனாலும், திட்டமிட்டு, தினம் குழந்தைகளுடன் நேரம் செலவழிக்க வேண்டும்; அக்கறையோடு அவர்களை வளர்க்க வேண்டும்.

தாய்தந்தையரால் பேணி வளர்க்கப் பட்டு நல்ல நிலைக்கு உயர்ந்து விட்ட மக்கள் தங்கள் தாய்தந்தையரைப் பேணிப் பாதுகாப்பது அவசியம். இன்றைய கால கட்டத்தில் ஓரிரண்டு பிள்ளைகள் என்றாலும் வளர்த்துப் படிக்க வைத்து நல்ல நிலைக்குக் கொண்டு வரும்போது தாய் தந்தை ஒய்வு பெறுங்காலம் நெருங்கிவிடுகின்றது.

அப்படி ஒய்வு பெறுங்காலம், பெரும்பாலான வேலைகள் ஒய்வு ஊதிய வாய்ப்புக்கள் இல்லாதவையாகவே உள்ளன. அப்படிப்பட்ட பெற்றோர்கட்குப் பொருளாதாரச் சிரமமும் ஏற்படலாம்.

ஆனால் பெரும்பாலான நடுத்தர வர்க்க மக்கள் பொருளாதாரச் சிரமங்கள் இல்லாமல் இருந்தாலும் தனிமைச் சிறைவாசம் என்கின்ற துயரை அனுபவிக்கிறார்கள். அவசியத்தின் காரணமாக வெளிநாட்டிலோ, வெளியிடங்களிலோ பணிபுரியும் மக்கள் தங்கள் பெற்றோர்கள் முழுவதும் தனிமைப்படுத்தப்படாமல் அவ்வப்போது வந்து பார்த்து, குழந்தைகளை அழைத்து வந்து, உடன் ஓரிரு நாட்கள் தங்கி அன்போடு, பார்த்துக் கொள்ளலாம். அதுவும் இயலாத நிலையில் முதியோர் இல்லங்களில் சரணடைய வேண்டிய கட்டாயம் பெற்றோர்க்கு ஏற்படுமானால் நல்ல வசதி கொண்ட ஒன்றைத் தேர்ந்தெடுத்துப் பொருளாதாரத் தேவைகளையும் பகிர்ந்து

கொள்ளலாம். நேரில் வர இயலாத தொலை தூரம் எனினும் தொலைபேசி கைபேசி மூலம் நீங்கள் அன்புடன் பொறுப்புடன் பேசி, குழந்தைகளையும் பாட்டி தாத்தாவுடன் பேசச் சொல்லி அவர்களுடைய பாசத்தவிப்பை நீங்கள் நீக்கலாம்.

எதுசெய்தாலும் அன்பும் பாசமும் பொறுப்பும் அரவணைப்பும் உங்கள் நெஞ்சிலும் துணையின் நெஞ்சிலும் நிறைந்திருக்கச் செய்தீர்களே ஆனால் உங்களுடைய நியாயமான கஷ்டங்களை உங்கள் பெற்றோர்கள் புரிந்து கொள்வார்கள். அப்போது அவர்களுக்கு உள்ள சிரமம் தோன்றாது. எதையும் ஒரு சமாதானத்தோடும் மகிழ்வுடனும் ஏற்றுக்கொள்வார்கள்.

திருமூலர் தர்மத்தைப் பற்றிச் சொல்வது போல் முடியுமானால் உங்கள் உடன் உள்ளவர்க்கு உணவு அளியுங்கள், இல்லாதபோது இறைவர்க்கு ஒரு பச்சிலை அதுவும் முடியாவிட்டால் பசுவிற்கு ஒரு கைத்தழை அதுவும் முடியாவிட்டால் யாவர்க்கும் இயலக்கூடிய கனிவான மொழிகள் என்பாரே, அதுபோல் உங்கள் பெற்றோரை உடன் வைத்துக் காப்பாற்றுங்கள் இல்லையென்றால் அடிக்கடி சந்தியுங்கள், குழந்தைகளைக் கூட்டிச் செல்லுங்கள். அதுவும் இயவில்லையானால் தேவையானவற்றை அனுப்பி மனமார அன்பு செலுத்துங்கள். அவர்கள் விரும்புவது பாசமும் அன்பும் தான்; அதுவும் இல்லையானால் அடிக்கடி அன்பான வார்த்தைகளால் உண்மையான பாச மொழிகளால் அவர்கள் தனிமையைத் தவிர்க்க முயலுங்கள்.

இதுவும் முடியவில்லை என்றால் அவன் ஒரு மகனோ மகளோ இல்லை; மிருக வாரிசு. மிருகமா ? மனித உயிரா ? சிந்தியுங்கள்.

*ஆசிர்வாதங்கள்*

ஸ்ரீசேஷாத்ரி சிவனார் அருளிய

# நா நா சீவ வாதக் கட்டளை (தொடர்ச்சி)

**உரை விளக்கம் : சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

## நூல்

இன்னும், ஐந்து பூதங்களினுடைய இரஜோ அம்சத்திலே, பூதத்திற்கு ஒவ்வொரு மாத்திரை எடுத்து ஒன்றாகக் கூட்டிவைத்தது வியானாதி பஞ்ச வாயுக்கள். இவைகளில், வியானவாயு ஆகாசத்தின் அம்சம் ஆனபடியால் ஆகாசத்தைப்போலச் சர்வாங்கமும் வியாபித்திருக்கும். பிராணவாயு வாயுவின் அம்சம் ஆனபடியால் வாயுவைப்போல இருதயத்திலிருந்து நாசிகாதி பரியந்தம் அலையும். அபானவாயு அக்கினியின் அம்சம் ஆனபடியால் அக்கினியைப் போல சாடராக்கினியாக உஷ்ணித்துக் கொண்டு குதத்தைப் பற்றி நின்று, உண்ட அன்ன பானாதிகளைச் சீரணிப்பிக்கும். சமானவாயு அப்புவின் அம்சம் ஆனபடியால் சரீர நடுவான நாபித்தானத்தில் நின்று உண்ட அன்னரசங்களை அப்புவைப்போல இழுக்கும். உதானவாயு பிருதிவியின் அம்சம் ஆனபடியால் கண்டத்தைப் பற்றிப் பிருதிவியைப்போலக் கடினமாக நின்று, உண்ட அன்ன பானாதிகளைக் கடையும். இந்தப் பஞ்ச வாயுக்களையும் அல்லாமல், வாந்தி பண்ணுவிக்கின்றது நாகன் என்றும், இமைத்து விழிப்பிக்கின்றது கூர்மன் என்றும், குறுகுறுத்துத் தும்மச் செய்கின்றது கிரிகரன் என்றும், கொட்டாவி கொள்ளச் செய்கின்றது தேவதத்தன் என்றும், வீங்கச் செய்கின்றது தனஞ்சயன் என்றும், வேறே ஐந்து வாயுக்கள் உண்டென்று சிலர் சொல்லுவார். இவ்வைந்தும் பிராணனுடைய தொழில் ஆனபடியால் வேறல்ல.

## விரிவுரை

இந்நூலின் முந்தைய ஐந்தாவது பகுதியில் - விட்சேப சக்தியில் இருந்து தோன்றியவை ஐம்பூதங்கள் என்றும் அவை சூட்சுமம் ஆனவை கண்ணிற்குத் தெரியாத நுட்பமானவை, அவை சத்துவம்,

ரஜோ, தமசு ஆகிய மூன்று குணங்களும் கூடியவை. எனவே அவை சூட்சும் பூதங்கள் என்றும் முக்குண பூதங்கள் என்றும் கூறப்படுவன என்று பார்த்தோம்.

இதற்குச் சற்று முன்னர் இந்த ஐம்பூதங்கள் தனித்தனியாக ஒவ்வொரு பூதங்களுடன் கூடுகிறபோது அந்தக்கரணங்கள் ஞானேந்திரியங்கள் ஆகிய ஞான சாதனங்கள் தோன்றின என்று கண்டோம். இப்போது சூட்சும ஐம்பூதங்களுடன் தனித்தனியாக ரஜோ குணம் கூடும் போது பஞ்ச வாயுக்கள் தோன்றுகின்றன. அது எவ்வாறு எனக் காண்போம்.

ரஜோகுணம் ஆகாயத்துடன் கூடும்போது ஆகாயத்தைப் போல் எங்கும் நிறைந்து உள்ளது எல்லா உடல் உறுப்புகளிலும் பரவி நிரம்பியுள்ள வியானவாயு தோன்றும். ரஜோகுணம் வாயுவோடு கூடும் போது சலனமே குணமாகக் கொண்ட, எப்பொழுதும் மேலும் கீழும் அலையக்கூடிய பிராணவாயு தோன்றும். பிராணவாயு - நாசியில் (மூக்கில்) இருந்து இருதயத்திற்குக் கீழாகவும் பின்னர் மேலாகவும் இமைப்பொழுதும் இடைவிடாது ஓடிக் கொண்டிருக்கும். அக்னியின் அம்சமாக குடலில் வயிற்றில் இடங்கொண்டு சடராக்கினியாக - அணையாத தீயாகத் தோன்றி குடலில் உள்ள, உண்ட உணவையும் பருகிய நீரையும் மற்ற பானங்களையும் எரித்துச் செரிமானம் செய்யும் இவ்வாயு அபான வாயு என்றழைக்கப்படும். நீரின் அம்சம் ரஜோ குணத்துடன் கூடும் போது நீரின் தன்மையால் செரித்த உணவை இழுத்துக் கொண்டு எங்கும் கொண்டு செல்லும். பூமியின் அம்சம் ரஜோ குணத்துடன் கூடும்போது பூமியின் குணமான கடினத் தன்மையால் கழுத்துப்பகுதியில் நின்று வருகிற உணவுப் பண்டங்களைக் கடைந்து செரிமானத்திற்கு ஏற்றவையாக, உதவியாகச் செய்யும் உதானவாயு.

இவை ஐந்தும் தவிர - மேலும் ஐந்து துணை வாயுக்கள் உண்டு அவை அனைத்தும் பிராணவாயுவின் துணைவாயுக்கள் ஆகும். வேண்டாதவற்றை வெளியாக்கும் வாந்தி பண்ணுகிற வாயு நாகன்

எனப்படும். கண் இமைகளை மூடித்திறக்கச் செய்வது கூர்மன் எனப்படும். குறுகுறுத்துத் தும்மலை ஏற்படுத்துவது கிரிகரன் எனப்படும். கொட்டாவி விடச்செய்வது தேவதத்தன் எனப்படும். மனிதன் இறந்தபின்னர் அவன் உடலை வீங்கச் செய்வது தனஞ்சயன் என்னும் வாயுவாகும். இவை அனைத்தும் பிராணவாயுவின் துணை வாயுக்கள் ஆகும்.

## நூல்

9. இன்னும், ஆசாசம் முதலிய பஞ்ச பூதங்களினுடைய இராஜோ அமசத்திலே, பூதத்திற்கு ஒவ்வொரு மாத்திரை எடுத்துத் தனித்தனியே வைத்தது வாக்காதி கர்மேந்திரியம் என்று சொல்லப்படும். இவைகளில், ஆகாசத்தின் இடமாக வாக்கு வசனிக்கும். வாயுவின் இடமாகப் பாணி இடுதல், ஏற்றல் செய்யும். அக்கினியின் இடமாகப் பாதம் நடக்கும். அப்புவின் இடமாகப் பாயுரு மலசலாதிகளை வெளியிலே தள்ளும். பிருதிவியின் இடமாக உபஸ்தம் சுகத்தைப் பண்ணும்; இந்த ஐந்தும் தனித்தனியே இருந்ததுகொண்டு மறுதொழில் செய்யமாட்டாது. வியானாதி வாயுக்கள் ஐந்து மாத்திரையும், ஒன்றாய்க் கூடினது கொண்டு, கர்மேந்திரியம் ஐந்தின் வழியினாலும் ஐந்து தொழில்களையும் செய்து முடிக்கும். இந்த வாயுக்கள் ஐந்தும், கர்மேந்திரியங்கள் ஐந்தும், ஆகப் பத்தும் இரஜோ அம்சம் ஆனபடியினால் கிரியா சாதனம் ஆயின. அந்தக்கரணம் -5, ஞானேந்திரியம்-5, வாயுக்கள் -5, கர்மேந்திரியம்-5, ஆக இருபது தத்துவமும் சூக்ஷும சரீரம் என்று சொல்லப்படும். இந்தச் சூக்ஷும சரீரத்தை மாயாப் பிரதிபிம்பனாக இருக்கின்ற ஈசுரன், அவித்தையாப் பிரதிபிம்பர் ஆகிய சீவர்கள் அநேகர் ஆகையால் ஒவ்வொருவருக்கு ஒவ்வொரு சரீரமாகச் சிருஷ்டித்து அளித்தான். இப்படி சூக்ஷும சரீர கற்பனை சொல்லப்பட்டது.

## விரிவுரை

அடுத்ததாகச் செயல்களைச் செய்யக்கூடிய - கர்ம இந்திரியங்கள் உற்பத்திபற்றிய கற்பனையைப் பார்ப்போம்.

ரஜோ அம்சத்துடன் ஒவ்வொரு பூதத்தின் உடைய தனிப்பகுதிகளைச் (தன்மாத்திரை) சேர்ந்து சூட்சும உடலின் செயற்கருவிகள் தோன்றுகின்றன. ரஜோகுணம் ஆகாயத்துடன் கூடும்போது வசனங்களைப் பேசுகிற வாக்குப்பிறக்கும் (வாய் அல்ல - பேசும் தன்மை மட்டுமே) வாயுவின் கூட்டாலே பாணி (கை) பிறக்கும். இது முன்னே பின்னே அசைத்தல் கொடுத்தல் வாங்கல் ஆகியவற்றைச் செய்யும் சக்தி பிறக்கும். அக்னியோடு கூடும் ரஜோ குணத்தால் பாதம். இது நடக்கும் சக்தியைச் கொடுக்கும். நீரின் குணத்தாலே பாயுரு (குதம் - குடற்பகுதி ) தோன்றும் இது உடற் கழிவுகளை - மலம் - நீர் - வெளியேற்றும் சக்தி. பூமியின் குணம் மிகும் போது பிறப்புறுப்புத் தோன்றும். இது சிற்றின்பம் தோற்றுவிக்கும் சக்தி. உயிர் விருத்தி செய்கிற சக்தி ஆகியவை உடையது.

இப்படியாக ரஜோகுணத்தோடு கூடி ஐம்பூதங்களும் பஞ்ச வாயுக்களும் பஞ்ச கர்மேந்திரியங்களும் தோன்றிச் செயல்படுகின்ற சக்தியைத் தரும். இவை கிரியா சாதனங்கள் என்றறியப்படும். அந்தக் கரணங்கள் - 5, ஞானேந்திரியம் - 5 ம் ஆக 10 ஞான சாதனங்களும் சத்துவகுணத்தால் தோன்றின. வாயுக்கள் - 5ம் கர்மேந்திரியம் - 5ம் ஆக 10 கிரியா சாதனங்களும் கூடிச் சீவர்களின் சூட்சும உடலுக்கு உரிய சாதனங்களின் உற்பத்தி கூறப்பட்டது. சூட்சும சரீரம் - பிரமத்தின் பிம்பமாகத் தோன்றிய மாயை, அதனின் பிரதிபலிப்பாகத் தோன்றிய ஈசுவரன்; அதன் பிரதிபிம்பமான அவித்தை. இப்படி அவித்தையின் காரணமாகச் சூட்சும சரீரம் உற்பத்தியால் பல கோடி பிரதிபிம்பங்கள் அண்ட சராசரங்கள் எல்லாவற்றிலும் தோன்றுவர். ஈசுவரன் ஒவ்வொரு -வருக்கும் ஒவ்வொரு நுண் உடலாகச் சிருஷ்டித்து அளித்துள்ளான். இப்படியாக சூட்சும சரீர உற்பத்தி கூறப்பட்டது. இனி தமோ குணத்தின் செயல்பாடுகள் அதனால் உண்டாகும் தூல பூதங்கள் தூல உடல்கள் (கண்ணுக்குப் புலப்படுபவை) பற்றிப் பார்ப்போம்

*தொடரும்....*

## கோயிலூர்ப் புராணம் (தொடர்ச்சி)

முனைவர். நா. வள்ளி

### சாப விமோசனப் படலம் :

அகத்திய முனிவர் வீரபாண்டியனுக்குச் சொன்னவாறே, சைமினி முனிவருக்கு, மதுப்பொய்கையின் சிறப்பையும் அப்பொய்கை வீரசேனன் என்னும் பாண்டி மன்னனின் சாபத்தைத் தீர்த்த வரலாற்றையும் கூறத்தொடங்கினார்.

முன்னொரு காலத்தில் செந்தமிழ் நாடாகிய பாண்டியநாட்டை 'வீரசேனன்' என்ற பாண்டிய மன்னன் ஆண்டு வந்தான். அவன் வீரமும், கல்வியும், கொடையும், ஆண்மையும், புகழும் உடையவனாக விளங்கினான். சிவமை மறவாத சிந்தையனாகிய அவனுக்கு வேட்டையாடுவதில் பெருவிருப்பம். அதனால் பலவனங்களுக்கும் சென்று புலி, கரடி, சிங்கம், யானை, முள்ளம்பன்றி, காட்டுப்பசு, மான், காட்டுப்பன்றி முதலிய பலவகை விலங்குகளை வேட்டையாடி மகிழ்வதை வழக்கமாகக் கொண்டிருந்தான்.

'வல்லியம் குடாவடி மடங்கல் வாரணம்
சல்லியங் கவயம் விண்டாங் குரங்கமா
வெல்லிய லெயிறுடை எறுழியே முதல்
புல்லிய மாவெலாம் புரளவீட்டினான்'

இப்படி ஒரு சமயம் வேட்டையாடி வருபவன், காட்டில் கண்ணுவ முனிவரின் ஆசிரமத்தைக் கண்டான். அப்போது, அம்முனிவர் பிள்ளையைப் போலப் பொத்திப்பொத்தி வளர்த்திட்ட கவரிமான் ஒன்று ஆசிரமத்திலிருந்து வெளிப்பட்டு முன்றிலில் புல்மேய்ந்து விளையாடிக் கொண்டிருந்தது. கவரிமானைக் கண்டதும் மன்னன், அதன் உடலம் கீழுறும்படியாகக் கூர்மையான அம்பைச் செலுத்தினான். கவரிமான் வெருவி அலறியவண்ணம் கீழே விழுந்து இறந்தது. மானின் இரைச்சலைக் கேட்டு மெய்பதறிய கண்ணுவ முனிவர் மான் இறந்து கிடப்பதைக் கண்டார்; வருத்தமும் சினமும் கொண்டார். மானின்

இறப்புக்குக் காரணமான சந்திரகுலத்தோன்றலான விரனே பாண்டியன் கையில் வில்லோடும் அம்போடும் நிற்பது கண்டார். அவனை நோக்கி, 'கருணையில்லா மன்னவனே, மகவுபோல யான் போற்றி வளர்த்திட்ட இக்கவரிமானைக் கொன்றனை. ஆகையால் நீ எல்லையில்லாத் துன்பத்தை யடைந்து, வெங்கொலைக்கு அஞ்சாத வேடனாகக்கடவாய்' என்று சபித்தார்.

'மகவின் யான் அருமையின் வளர்த்துப் போற்றிய
தகவுடை மானை நீ சங்கரித்தலான்
மிகவுடை வருத்தமே மேவி வெங்கொலை
புகவுடை வேடனாய்ப் போதி என்றனன்'

'வேடனாய்ப் போதி' என்று முனிவர் சபித்த அளவிலே மன்னனும் கொலைத்தொழிலை நாடுகின்ற வேடுவனாகிக் காட்டிலே அலைந்து திரியலானான். வேடனாய்த் திரியும் மன்னனுடைய பரிவாரங்கள், நாடு திரும்பிப் புரோகிதர் அமைச்சர் முதலியோருக்கு மன்னனின் நிலையை எடுத்துரைத்தன. அதைக்கேட்டு மிக்க துயரமடைந்த அவர்கள், பின் ஒருவாறு தேறி மன்னன் மகனுக்கு முடிகவித்து அரசனாக்கினர். வீரசேன பாண்டியன் மகனாகிய இராச சேகர பாண்டியனும் நல்லவிதமாக நாட்டைக் காத்துவந்தான்.

வேடுவனாகிய வீரசேன பாண்டியன், வனங்களில் வேட்டையாடி மிருகங்களைக் கொன்று அலைந்து திரிந்து கொண்டிருந்தான். அப்படித் திரிபவன் முன்வினைப் பயனால் சமிவனத்தை அடைந்தான். புண்ணியச் சமிவனத்தை அடைந்த அவ்வேட்டுவன் வெயிலின் வெம்மை தாங்காமல் மதுப்பொய்கையின் அருகிலுள்ள ஒருமரத்தின் நிழலிலே தங்கினான். அவனை, மதுப்பொய்கைத் தடத்திலிருந்த மீன்கள் எல்லாம் நோக்கின. நோக்கி, "இம்மன்னவன் கண்ணுவமுனிவரின் சாபத்தாலே வேடனாயினான்; இவனுடைய சாபத்தைப் போக்குவோம்" என்று ஒன்றோடு ஒன்று கலந்தினிது பேசிக் கொண்டன. மேலும் "நம்மைக் கொடியாக உடைய இப்பாண்டிய

மன்னன் இவ்வாறு வேடனாகத்திரிவதை நாம் பார்த்துக் கொண்டிருக்கலாமா?" என்றும் பேசிக் கொண்டன.

'இருந்தவன்தனைத் தடத்தியங்கு மீன்குலம்
திருந்துறநோக்கி இத்திறல்கொள் மன்னவன்
அருந்திறல் முனிவனால் வேடனாயினான்
பொருந்துற இவன்வினை போக்குவாமெனா'

'ஒன்றினுக்கொன்று இனிதுரைத்துப் பின்னரும்
நன்றிகொள் கொடிமிசை நமைப் பொறித்திடும்
வென்றிகொள் மன்னவன் வேடனா யாம்
இன்றுபார்த்திருப்பதென் என்றும் பேசின'

இவ்வாறு தம்முள் பேசிக்கொண்ட மீன்களெல்லாம், பொய்கைமேல் எழுந்து குதித்துத் தம் செதிளினால் தீர்த்தநீரை அடித்துக் கிளப்பின. பொய்கைத் தீர்த்தத்தின் நீர்த்துளிகள் வேடனின் மேனியில் பட்டுத் தெறித்தன. நீர்த்துளிகள் தன்மேனியில் பட்ட அளவிலே வேடனின் சிந்தையிலிருந்த கொலை புரியும் எண்ணமெல்லாம் குலைந்து போயின. புண்ணிய நினைவுகள் உண்டாயின; அவனுடைய மாசுகள் எல்லாம் தீர்ந்தன. பிறகு அவன் நிர்மலமான உள்ளத்துடன் முறைப்படி மதுப்பொய்கைத் தீர்த்தத்திலே மூழ்கி எழுந்தான். எழுந்த அளவிலே அரவின் வாயிலிருந்து வெளிப்பட்ட நிலவைப்போல் அவனது வேட்டுவ வடிவம் நீங்கிற்று. முன்புபோலத் தன் உருவத்தை அடைந்தான்

"பொலிதரு விதியின் அப்புனலில் மூழ்கினன்
மலிதரு வேட்டுவவடிவம் நீத்தனன்
ஒலிதரு மன்னவன் உருவம் எய்தினன்
கலிதரு பாந்தளிற் கழிந்த திங்கள் போல்"

பிறகு மன்னவன் வீபூதி உருத்திராக்கத்தை அன்புடன் அணிந்து ஐந்தெழுத்தை இதயத்தில் தியானித்து கொற்றவாளீசர் ஆலயத்தைச் சார்ந்தான். திரிபுவனேசரின் பதத்தைப் பணிந்து போற்றினான்.

'நம்வினை கழிந்தது' என்று மகிழ்ச்சியால் துள்ளினான். பின் அடுத்துவரும் நாட்களில் சூரியன் உதித்திடுமுன் எழுந்து, மதுப்புட்கரணியில் நீராடி, விதிப்படி முன்னோர்களுக்குத் தர்ப்பணம் செய்து, பிதிருக்களையெல்லாம் வாழச்செய்தான்.

'கதிர் உதித்திடும் முனங்கலந்து தாமரைப்
பொதியவிழ் மாமதுப்பொய்கை மூழ்குபு
விதிகெழு தருப்பணம் விரும்பி யாற்றுபு
மதிகெழு பிதிரெலாம் வாழச் செய்தனன்'

காலந்தப்பாது வேளைதோறும், கண்ணுதற் பிரானாகிய கொற்றவாளீசரின் திருவடியை வணங்கிச் சேவை செய்தும், திருநெல்லை மாதை வணங்கியும் முறையான நியமங்களை மேற்கொண்டு வன்னிவனத்திலே இனிது தங்கியிருந்தான் வீரசேனன். இச்செய்திகளையெல்லாம் அறிந்த காளிமா புரத்திலே உள்ள புரோகிதரும், அமைச்சரும் அரசனாகிய இராசசேகர பாண்டியனும், மக்களும் மகிழ்ச்சிக் கடலில் ஆழ்ந்தனர். அனைவரும், பலவிதமான இசைக் கருவிகள் முழங்க நெடுங்கொடிகள் சூழ்தரப் புறப்பட்டு சமிவனத்தை அடைந்து, வீரசேனனைக் கண்டு அடிபணிந்து வணங்கி, நாட்டுக்குத் திரும்ப வேண்டுமென்று வேண்டிக் கொண்டனர். மன்னனும் அவர்களைக் கண்டு உரையாடி மகிழ்ந்து, அவர்கள் வேண்டுகோளை ஏற்று நாடு திரும்ப இசைந்தான்.

எங்கும் ஒரே மகிழ்ச்சி ஆரவாரம். சங்குகள் முழங்கத் தாரைகள் இசைக்க, பெண்கள் நடனமாடிவர எம்மருங்கும் வீரர்கள் சூழ்ந்துவர, மங்கலக் களிற்றின் மேல் ஏற்றி காளிமாபுரத்திற்கு மன்னனை அழைத்துச் சென்றார்கள். வீரசேன பாண்டியனுடைய இராசசேகர பாண்டியனே அரசாட்சி செய்துவர, வீரசேனன் கொற்றவாளீசர் தாளினை நெஞ்சிலே நிறுத்தியவனாய்ப் பல காலம் வாழ்ந்து, சிவபிரானாரின் அருளினால் இறுதியில் சிவபதத்தை அடைந்தான்.

வீரசேனனுடைய சாபத்தைத் தீர்த்ததனால், அன்று முதல் மதுபுட்கரணித் தீர்த்தமானது, 'சாபவிமோசனத் தீர்த்தம்' எனப் பெயர் பெற்றது. சூரிய கிரகணம், சந்திரகிரகணம் ஆகிய புண்ணியகாலங்களிலும் மாதப்பிறப்பு, கார்த்திகை மாதம், சோம வாரம், துலா மாதம், மகர மாதம். விஷு புண்ணியகாலம் ஆகிய காலங்களில் எவனொருவன் அந்தத் தீர்த்தத்தில் மூழ்கி நீராடி அந்தணர் முதலியோர்க்கு இயன்றளவு தானம் பண்ணுகிறானோ அவன் அடையும்பேற்றை பிரமனாலும் கூற இயலாது.

"மதிகதிரை அராவிழுங்க வருங்காலம், மதித்தோற்றம்
துதியமை கார்த்திகை மாதம் சோமவாரம் கருது
திதியமையும் துலா மாதம் செறிமகரமாத நலம்
பதிவிடு புண்ணியகாலம் பகரும் இவைமுதலாக"

"சொற்றிடு புண்ணியகாலத் தோற்றம் உணர்ந்து அத்தீர்த்தம்
பற்றிடும் அன்புறமூழ்கிப் பனவர் முதலியர்க்கு அங்கை
உற்றிடு பொன் மணியாதி உதவுவார் பெறும் பேற்றைக்
கற்றிடு நான்முகனாலும் கரைய முடியாதம்மா"

அது மட்டுமல்ல, வன்னிவனத்தில் வசிப்போரும் மதுப் பொய்கையில் குடைந்து நீராடுவோரும் நல்நியமத்தோடு திரிபுவனேசரின் அடியைப் பணிவோரும், திருநெல்லை மாதின் திருவடியை வணங்குவோரும் அடையும் பேற்றை யாராலும் அளவிட்டுக் கூற முடியாது.

"வன்னிவனம் வசிப்போரும் மதுப்பொய்கை குடைவோரும்
நன்னியமத்தொடு புவனநாதனடி பணிவோரும்
கன்னிஉமை திருநெல்லை காமரடி பணிவோரும்
முன்னியடை பெரும்பேற்றை மொழிவாரும் உளரேயோ"

இவ்வன்னிவனத் தலத்தின் பெருமையை முழுதும் எடுத்துரைக்க வல்லவர் கொற்றவாளீசுவரரேயன்றி மூவுலகிலும் யாருமில்லை என இவ்வாறாக வன்னிவனக் கொற்றவாளீசுவரரின் பெருமை அனைத்தையும் அன்புடனே வீரபாண்டிய மன்னனுக்கு எடுத்துரைத்தார் அகத்திய மாமுனி. அவருரைத்த வன்னிவன மான்மியத்தைக் கேட்ட வீரபாண்டிய மன்னன் தெளிவடைந்த நெஞ்சினையுடையவனானான். அவனுக்கு மீண்டும் கருவிலே வாராத பெரும் பிரம ஞானமும் கைகூடியது. முத்திப்பேற்றைத் தனக்களித்த அகத்திய முனிவரைப் பன்முறையும் தொழுதெழுந்து வணங்கி விடைபெற்றுக் கொண்டு, புவனேசர் பதம் போற்றி, தன் நாட்டை அடைந்து அரசனாய் முடிகவித்து நன்முறையில் நாட்டையாண்டான். சீவன் முத்தனாயிருந்து, புவனேசர் பதம் போற்றிப் பணிவிடையும் மிகப் புரிந்து இறுதியில் விதேச முத்தியடைந்தான்.

இந்த விருத்தாந்தங்களை எல்லாம் சைமினி முனிவருக்கு அகத்தியர் எடுத்துரைத்தார். கேட்டு மகிழ்ந்த சைமினி முனிவரும் சித்த சுத்தியடைந்து, பிரமஞானமும் கைவரப்பெற்று, அகத்தியரை வணங்கிப் "பன்னாளும் முயன்று செய்த தவத்தாலும் கிடைத்தற்கரிய பேறு எனக்குக் கிடைத்தது" என்று கூறி வணங்கினார்.

"கேட்ட சைமினி முனிவன் கிளருவகை பொங்கியெழ
வாட்டம் முழுவதும் ஒழித்து சித்தசுத்தி வாய்ந்தானாய்
ஈட்டரிய பிரமஞானமும் எய்தப்பெற்றானாய்
நாட்டமிகு குறுமுனிவன் நன்மலர்த்தாள் இணைப்பணிந்தான்"

"ஐயனே நின்னருளால் அருந்தவம் பன்னாள் முயன்றும்
எய்தரிய சித்தசுத்தி பிரமஞானமும் எளிதின்
மெய்வகை பெற்றனன் அடியேன் விளம்புவதென் இனியுய்ந்தேன்
உய்வகை மற்றிதின் வேறும் உண்டுகொலோ எனத் துதித்தான்"

பிறகு சைமினி முனிவர் அகத்திய முனிவரைத் தொழுது, வன்னிவன மாதேவரை வணங்கி விடைபெற்றுத் தன்னுடைய ஆசிரமத்தை அடைந்து, பலருக்கும் வன்னிவனத் தலத்தின் மான்மியத்தை எடுத்துரைத்த வண்ணம் வாழ்ந்தார்.

வன்னிவனநாதரின் சிறப்பையும், திருநெல்லையின் கருணைத் திறத்தையும், வன்னிவனத்தின் சிறப்பையும் வீரபாண்டிய மன்னனுக்குச் சொன்னவாறே சைமினி முனிவருக்கு அகத்தியர் எடுத்துரைத்த செய்தியையெல்லாம் நைமிசவனத்துச் சௌனகாதி முனிவர்களுக்கு, சூதமுனிவரைத் தொழுது, "இன்று நின்னருளாலே இத்தகைய மான்மியத்தைக் கேட்கும் பேறு பெற்றோம்" என்று சொல்லி சூதமுனிவரோடு வன்னிவனத்தை அடைந்து மதுப்பொய்கையில் நீராடி கொற்றவாளீசுவரரையும் திருநெல்லையையும் வணங்கி மீண்டும் நைமிச வனத்தை அடைந்தனர்.

இத்தகைய சிறப்புக்களையுடைய வன்னிவனப் புராணத்தை எழுதுவோர், எழுதுவிப்போர், சொல்லுவோர், கேட்போர் அனைவரும் எண்ணுதற்கரிய போகங்களை இப்புவியில் நுகர்ந்து இறுதியில் பிரம ஞானியராய் இன்புறுவர்.

"இன்னபுராணத்தை இனிது எழுதுவோர் எழுதுவிப்போர்
பன்னருஞ்சொற்பொருள் உரைப்போர் உரைப்பவர் தம்பாற் கேட்போர்
என்னரும் எண்ணரும் போகம் இப்புவியில் நுகர்ந்து ஈற்றில்
நன்னரொளி மிகுபிரம ஞானியராய் இன்புறுவர்"

இப்புராணத்தைப் படித்துப் போற்றிப் பாதுகாப்போர் இல்லங்களில் எந்தத் தீமைகளும் அணுகா. வெருட்டுகின்ற பூத பிசாசங்களும் மேவா. வறுமைகள் போகும். திருமகள் நீங்காது அமர்வாள் ; நல்புத்திரப்பேறு வாய்க்கப் பெறும்.

"பொருள்பலவும் இனிதமை இப்புராணமமர் கிருகத்து
வெருள் பலசெய் பூதபிசாசாதிகளும் மேவாவாம்

இருள்பல செய்வறுமையற இந்திரை நீங்காது அமர்வாள்
அருள் பலபுத்திரர் பொலிய அமைந்து விளங்குவர் மாதோ"

வேதாந்தக் கருத்துக்கள் நிறைந்த கொற்றவாளீசர் பெருஞ் சரித்திரத்தைக் குரு வாயிலாகக் கேட்பவர்கள் பெரும் பேறு பெற்றவர்களாவர்.

"பிரியமிகும் கொற்றவாளீசர் பெருஞ் சரித்திரமாம்
அரிய புகழ் வேதாந்த முழுவதும் நன்கமைதலினால்
உரிய அதிகாரிகளாயுள்ளவர் இப்புராணத்தைத்
தெரியவமை குருமுகமாகத் தெளிதரின் தன்னியராவர்"

"சின்மயரூப சிதம்பர தேசிகர்மொழிய, யான்செய்த பெரும் புண்ணியத்தால் இப்புராணத்தைப் பாடினேன். அதனால் புன்மை அகலும்படியான பேரறம் முதலான பேறுகள் யாவும் அடைந்தேன்". என்று நூலின் இறுதியில் கோயிலூர்ப் புராணத்தைப் பாடிய மாகவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் பின்வருமாறு கூறுகிறார்கள்.

"திகழ்தரு சின்மயரூப சிதம்பர தேசிகன் மொழிய
இகழ்தருதலிலாதவன் சொல்லேற்ற பெரும் புண்ணியத்தால்
புகழ்தரும் இப்புராணத்தைப் பாடினேன் புன்மையெலாம்
அகழ்தரு பேரறமுதலா யாவும் அடைந்தனன் யானும்"

"இலங்குபுகழ் வன்னிவனம் வாழ்க ஒளிர் கொற்றவாளீசர் வாழ்க
கலங்குதல் தீர்த்து எனையாண்ட நெல்லைநாயகி பெரிய
கருணை வாழ்க
மலங்குதலில் அத்தலத்து மன்னிவளர் மாதவர்கள் வாழ்க வாழ்க
நலங்குலவு மணிமன்றுள் நடநவில எடுத்த பொற்றாள் நாளும்
வாழ்க".

*கோயிலூர்ப் புராணம் நிறைவுற்றது.*

# எண்ணத்தில் பூத்த
# வண்ணப்பூக்கள் ஆயிரம்
# வெற்றி

முனைவர் மெ. மெய்யப்பன்

* நேரத்தை வீணாக்காமல் சரியாகப் பயன்படுத்திக் கொள்வதில் ஓர் ஒழுங்கைக் கடைப்பிடித்து வந்தால் ஒவ்வொரு நாளும் உற்சாகமாக இருக்கும். புதிய எண்ணங்களின் வரவால் முன்னேற்றத்தை வெகு இயல்பாக முடுக்கிவிட முடியும்.

* சுய முன்னேற்றத்தில் பின்தங்கி இருக்கின்றோம் என்றால் அதற்குக் காரணம் நாம் பயனுள்ளவாறு நேரத்தைச் செலவிடாமல் சுணங்கிப் போனதுதான்.

* இறந்த கால நிகழ்வுகளை மறக்காமல் பாடம் கற்றுக் கொண்டு, எதிர்காலத் தேவைகளை முன் திட்டமிட்டுக் கொண்டு, நிகழ்காலத்தில் ஒவ்வொரு நிமிடமும் வாழ்ந்து வாருங்கள. முக்காலமும் அவர்களுக்குச் சிறப்பானதாக அமையும்.

* எழுதி முடிக்கப்பட்ட நம்முடைய கடந்த கால வரலாற்றை நம்மால் ஒரு நாளும் திருத்தி எழுத முடியாது. ஆனால் எழுதப்படவிருக்கும் நம்முடைய வரலாற்றை நாம் நினைத்தால் எப்படி வேண்டுமானாலும் எழுதப்படுமாறு செய்யமுடியும்.

* தேவையில்லாத வேலைகளைச் செய்து கொண்டு சிலர் நேரமே இல்லை என்று அலுத்துக் கொள்வார்கள்; வேலைகள் இருந்தும் ஈடுபாடின்றி வேலை செய்யாமல் வேறு சிலர் சும்மாவே இருப்பார்கள். ஆர்வமிருந்தால் அடுத்தடுத்துச் செய்வதற்கு வேலையுமிருக்கும், செய்வதற்குத் தேவையான நேரமும் கிடைக்கும்.

* செய்வதற்கு வேலைகள் ஏதுமிருந்தால் தள்ளிப் போட வேண்டியது மற்றவற்றைத்தானே ஒழிய வேலையை அல்ல.

* இயற்கையின் வரம்பிற்கு உட்பட்ட எதுவும் இயலும் ; இயற்கைக்குப் புறம்பானவைகள் எதுவும் இயலுவதில்லை. நாம்செய்யத் தொடங்கும் வேலை எந்த வகையைச் சேர்ந்தது என்பதைத் தெரிந்து கொண்டால், காலத்தை வீணாக்கும் நிலைஏற்படாது. பித்தளையைத் தங்கமாக்கும் முயற்சியில் ஈடுபட்டவர்கள் இறுதிவரை வெற்றி பெறாமல் போனதற்குக் காரணம் இயற்கைக்கு அப்பாற்பட்டுச் செயல்பட்டதே ஆகும்.

* அகத் திறமையைப் பெறும் ஆக்கப்பூர்வமான முயற்சியில் கொண்டுள்ள விருப்பத்தின் அளவால் முடிவதும், முடியாததும் தீர்மானிக்கப்படுகின்றன

* இயற்கையை மிஞ்சிய ஒரு வலிமையான தூண்டுகோல் இந்தப்பிரபஞ்சத்தில் வேறெதுவும் இல்லை. இயற்கையைப் பார்த்துப் பாடம் கற்றுக் கொண்டால் மனிதர்களும் இயற்கையைப்போல வெல்லமுடியும்.

* அனுபவங்களே செயல்களை நெறிப்படுத்துகின்றன. நெறிப்படுத்தப்பட்ட செயல்கள் யாவும் வெற்றிகரமாக முடிவடைகின்றன.

* இடைத்தடைகள் இல்லாமல் உலகில் எதுவும் நடந்துமுடிவதில்லை. இடைத்தடைகள் என்பன புதிய வாய்ப்புகளைத் தேடும் வாய்ப்புகளைத் தருகின்றன.

* வெற்றியின் ஒரு இரகசியம் நாம் நாமாக இருந்து கொண்டே செயலாற்றுவதுதான்.

* முடியும் என்று சொல்லிவிட்டால் நாம் அடுத்த கட்டத்தை நோக்கிச் செல்லவேண்டும். முடியாது என்று சொல்லிவிட்டால் ஓய்வு எடுத்துக் கொள்ளலாம் ; மனதை நீ ஆள்கின்றாயா இல்லை மனம் உன்னை ஆள்கின்றதா என்பதைப் பொறுத்து இது அமைகின்றது.

* நீ ஒரு தொழிற்சாலை என்றால் அங்கே தொழிலாளியும் நீதான், முதலாளியும் நீதான். உன் செயல்களைத் தீர்மானிக்கும் எஜமானரும், அவற்றைச் செய்யப்போகும் வேலைக்காரனும் நீதான் என்பதை மறந்து விடாதே.

* உன் செயல்களைத் தீர்மானிக்கும் எஜமானர் நீயாக மட்டுமே எப்போதும் இருக்க வேண்டும் என்பதில் உறுதியாக இருந்துவிட்டால் பின்னாளில் கவலைப்பட வேண்டிய நிலைஏற்படாது.

* வெற்றிக்கும் தோல்விக்கும் கதவைக் காவலின்றித் திறந்தேவைத்திருந்தால், உத்தரவின்றி யார் வேண்டுமானாலும் உள்ளே நுழைய நாமே அனுமதி கொடுத்தது போலாகிவிடும்.

* வெற்றியையும் தோல்வியையும் தீர்மானிப்பது எண்ணங்களை உற்பத்தி செய்யும் மனமே. மனதை ஒருவர் ஆள்பவராக இருப்பரேயானால் அவருடைய செயல்களில் வெற்றி வாய்ப்பு அதிகம், அப்படியில்லாது மனத்தால் அவர் ஆளப்படுவாரானால் தோல்வி ஏற்படுவதற்கான வாய்ப்பே மேம்படும்.

* வெற்றி பெற்ற மனிதனாக இருப்பதை விட மதிப்புடைய மனிதனாக இருப்பதே சிறந்தது.

* என்ன செய்து முடித்தோம் என்று எண்ணிப்பார்ப்பதை விட. இனி என்ன செய்ய வேண்டும் என்று எண்ணிப்பார்ப்பதுதான் ஆக்கப்பூர்வமாக இருக்கும்.

* வெற்றி என்பது இறுதி முடிவில்லை, தோல்வி என்பதும் இறுதியானதில்லை. உனக்கு இன்னும் வாழ்க்கை இருக்கும் போது தோல்விக்கு முடிவு இருக்கிறது. வெற்றிக்கு வழி இருக்கிறது. நம்முடைய மனதின் உறுதியே இதைத் தீர்மானிப்பதால் வெற்றி பெறும்வரை மனம் தளரக்கூடாது.

* ஆர்வம் குறையாமல் இருந்தால் தோல்விகளின் ஊடாக ராஜநடை போட்டு அரியணையில் வெற்றி முடி சூட்டிக்கொள்ளும்.

* எதற்கும் தயாராக இருப்பவனை நோக்கித்தான் வாய்ப்புகள் தேடி வரும்.

* இரண்டு மொழிகள் தெரிந்த ஒரு மனிதன் இரண்டு மனிதர்களுக்குச் சமம். ஒப்பிட்டால் அவனுக்குச் சிந்திக்க இரண்டு மூளைகள், உழைக்க நான்கு கைகள்,

* வெற்றியைப் பெற வேண்டுமெனில், வெற்றியின் மீது கொண்டுள்ள ஈடுபாடு, தோல்வியின் மீதுள்ள பயத்தைவிடக் கூடுதலாக இருக்க வேண்டும்.

* மனித முயற்கிகளுக்கு மட்டும் தான் பலன் கிடைக்கும். வெறும் தெய்வ நம்பிக்கைக்கு ஆசிர்வாதம் மட்டும் தான்; அப்படி என்றால் தெய்வ நம்பிக்கை ஏன் ? தெய்வ நம்பிக்கை மனதைப் பண்படுத்தி மனிதர்களின் ஒழுகலாற்றை மேம்படுத்தும். அது பின்னேற்றத்திற்கு நமக்கு நாமே கொடுத்துக் கொள்ளும் முட்டுக்கட்டை போன்றது.

* எழுதுவது மூலம் கருத்துக்களை மக்களுக்கு எடுத்துச் செல்வதுதான் உன் விருப்பமென்றால் எழுதுகோல் தங்கப் பேனாவோ, சாதரணப் பேனாவோ, பென்சிலோ, கருத்துண்டோ எப்படியிருந்தால் என்ன, நன்றாக எழுதினால் சரிதான்

* செல்வந்தனாவதற்கு எளிய வழியொன்றைக் கூறுவார்கள். தேவையில்லாமல் கண்டபடி செலவழிக்காமல் சேர்த்ததை சேமித்து வைத்தாலே போதுமானது. செல்வந்தனாகி விடலாம்.

*தொடரும்....*

## சேக்கிழார் போற்றும் பெண்ணின் பெருமை சாதாரணமாக எல்லோர்க்கும் ஏற்படும் ஐயங்கள்

**சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

1. காரைக்கால் அம்மையின் காலம் தொட்டுச் சுந்தரர் காலம் வரை 60 அடியார்களை மட்டுமே சுந்தரர் பாடியது ஏன்? உலகத்தில் அத்துணை பேர்தான் அடியார்கள் எனப் போற்றப்படும் தகுதி வாய்ந்தவர்களா? அடியார் என்பார்க்கு அளவுகோல் என்ன ?

2. மாணிக்கவாசகர் ஏன் திருத்தொண்டத் தொகையில் இடம் பெற வில்லை.

3. சேக்கிழார் பெருமான் ஏன் அடியார் வரலாறுகளிலே முக்கியப் பங்கேற்றுத் தொண்டாற்றிய பெண்மக்களின் பெயர்கள் கூடக் குறிப்பிடாமல் சொல்கிறார்.

4. சில அடியார்களின் இயற்பெயர் கூடக் குறிப்பிடப்பட வில்லையே ஏன் ?

5. திலகவதியார் திருவெண்காட்டு நங்கை போன்ற மிக அரிய செயல்களைச் செய்த பெண்கள் கூட ஏன் நாயன்மார் வரிசையில் சேர்க்கப்படவில்லை.

6. திருஞானசம்பந்தப் பெருமானும் வன்றொண்டரும் அடியார்களும் தொண்டர்களும் புடை சூழத்தான் எங்கும் சென்றிருக்கிறார்கள். நாவரசரோ எங்குமே தனிமனிதராகத்தான் சென்றதாகச் சேக்கிழார் பெருமான் பாடுகிறார். ஏன் ? நாவரசர் தனிமை விரும்பி அடியார்களைத் தடுத்தாரா ? இல்லை அவரது எளிமை காரணமாகத் தொண்டர்கள் தொடரவில்லையா !

7. சேக்கிழார் பெருமான் தனது நூலிலே மூவர் முதலிகளும் காரைக்கால் அம்மை தலையால் நடந்த பதி என்ற மரியாதை காரணமாக திருஆலங்காடு உட்புகுந்து ஆண்டவரைத் தரிசிக்காமல் வெளியே தங்கிப் பக்தி செலுத்தினார்கள் என்று

கூறுகிறார். ஆனால் தேவாரப் பதிகங்களிலே மூவரும் அம்மையைப் பற்றிப் பாடியதாகத் தெரியவில்லையே ஏன். மூவர் முதலிகள் பாடியும் பாடியவை கிடைக்காமற் போயினவா ?

8. சுந்தரரும் தன் திருத்தொண்டத்தொகையில் பேயார்க்கும் அடியேன் என்ற ஒரே சொல்லால் பாடிச் செல்கிறார் ? ஏன் !

9. சுந்தரரைப் பெற்ற காரணத்தால் சடையர், இசை ஞானியார் நாயன்மார் வரிசையில இடம் பெறுகிறார் ?

ஞானசம்பந்தப் பெருமானை அழைத்துக் தன் கணவரையும் பாண்டி நாட்டையும் சமண ஆதிக்கத்தில் இருந்து மீட்ட மங்கையர்க் கரசியும், அந்த யோசனையைக் கூறிச் சம்பந்தரைஅழைத்து வரக் காரணமாக இருந்ததனால் குலச் சிறையாரும் நாயன்மார் வரிசையில் இடம் பெறுகிறார்கள். ஆனால் சமண ஆதிக்கம் தமிழ் நாட்டில் இருந்து வெளியேற முதற் காரணமாக இருந்த நாவரசரையே சமணத்திலிருந்து சைவம் கொணர்ந்து ஆற்றுப்படுத்திய சிவத்தொண்டர் திலகவதியார் இடம் பெறவில்லை; புதல்வனை அறுத்துக் கறியாக்கி அமுது படைத்த தியாகப் பெண் திருவெண்காட்டு நங்கை இடம் பெற வில்லை. ஏன்?

10. மேல் ஓட்டமாகப் பார்க்குங்கால் நாயன்மார்களின் மனைவிமார்களை நாயன்மார்கள் தனி மனிதர்களாகச் சுதந்திரம் உடையவர்களாகக் கருதாமல் தங்களுடைய உரிமைப் பொருளாகக் கருதினார்களோ என்ற ஐயம் எழுகின்றது. முக்கியமாக இவை இயற்கையார், அமர்நீதி நாயனார், கலிக்கம்பர், சிறுத்தொண்டர் வரலாறுகளைக் காண்கின்ற போது தோன்றுகின்றன.

11. ஞான சம்பந்தர், சுந்தரர் இருவர்க்கும் அனேக சலுகைகளைத் தந்து உற்சாகப்படுத்திய இறைவன் நாவரசரை மட்டும் எண்பத்து இரண்டு ஆண்டுகள் வாழவிட்டுப் பல வழியாகச் சோதிக்கக் காரணம் என்ன? சமணம் சார்ந்து திரும்பியதாலா ? முற்பிறப்பு

வினை காரணமா? இல்லை அவர் வழியாக பல நற்குணங்களை உலகிற்கு அறிவுறுத்தவா?

நாயன்மார்கள் அனைவரும் அடிப்படையில் இறைத் தொண்டர்கள். அதன்வழி மக்கள் தொண்டர்கள். தனதென ஏதும் இன்றி யாவற்றையும் இறைப்பணிக்காக அர்ப்பணித்து விட்டவர்கள். இறைவன்பால் பேரன்பு பூண்டவர்கள். தாம் கொண்ட கொள்கையிலும் மனதார ஏற்றுக்கொண்ட தொண்டிலும் உறுதி மிகக் கொண்டவர்கள். ஏற்ற பணிக்கு நீக்குதற்கரிய இடையூறு ஏதேனும் வருமாகில் யாவற்றையும், தனது இன்னுயிர் உட்பட, தியாகம் செய்யத் தயங்காதவர்கள்.

இவர்களுடைய பேரன்பு, உறுதி, மனத்திறம் இவற்றின் ஈர்ப்பினாலே இவரைச்சுற்றி வாழ்ந்த இவர்தம் குடும்பம், ஊழியர், சுற்றம் என அனைவரும் தம்மையும் அத்தொண்டில் முழுமையாக ஆட்படுத்திக் கொண்டார்கள். இதனை நாம் பெரியபுராணம் காட்டுகிற அடியார்கள் அத்தனைபேர் வாழ்விலும் காணலாம்.

இறைவனை வணங்குதற்குக் கூடக்கொடுப்பினை வேண்டும். அவன் அருளாலே அவன் தாள் வணங்கி. அவன் அருள் இல்லாவிட்டால் கோயில் வரை சென்றும் திரிசனம் கிடைக்காது. திருப்பதியில் மணிக்கணக்கில் வரிசையில் நின்று வேங்கடத்தானைக் காண முன் வாயில் வரும்போது வயிறு கலக்கி ஓடியவர்களைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன். காசிக்குச் செல்ல ரயில் ஏறி, விஜயவாடாவில் காபி குடிக்க இறங்கித்தடுமாறிக் கால் ஒடிந்து ஸ்டெரெச்சரில் திரும்பி வந்தவரைப் பார்த்திருக்கிறேன்.

தர்மம் செய்ய வேண்டும் என்றால் குடும்பத்தார் ஒத்துழைப்பு இருந்தால்தானே இயலும், ஒத்த மனமுடைய மனைவி இருந்தால் தான் இறைத்தொண்டோ மக்கள் தொண்டோ, செய்ய முடியும். மனமும் பணமும் இருந்தால் மட்டும் போதாது. ஒத்த குணமுடைய மனைவி அல்லது சுற்றம் தேவை. இத்தகைய கொடுப்பினை

உள்ளவர்கள்தான் மனமாறத் தொண்டு செல்ல இயலும்.

அடியார்களில் பெரும்பான்மையினர் இல்லறத்தார்களே. நாயன்மார்களின் பேரன்பின் வலுவான தாக்கத்தால் அவர்தம் மனையும் சுற்றமும் அத்தொண்டில் முழு மனதோடு தம்மையும் ஆட்படுத்திக் கொண்டிருக்கிறார்கள். நாயன்மார்க்கு நாயகியார் அடிமையாக நடந்து கொள்ளவில்லை. இதனைப் பெரிய புராணத்தை மேலோட்டமாகப் படிப்பவர்களே புரிந்து கொள்ள முடியும். நாயகியரும் இறைத்தொண்டிலே கணவர்க்கு ஈடாக, ஏன் சில வரலாறுகளிலே, மேலாகவே தம்மை ஈடுபடுத்திக் கொண்டிருக்கிறார்கள்.

பெரியபுராணத்தைப் படிக்குங்கால் நான் சில சமயங்களிலே நினைப்பதுண்டு. சுந்தரரும் நம்பியாண்டார் நம்பியும் பாடியவற்றைச் சேக்கிழார் வரம்பாகக் கொள்ளாமல் இருந்திருந்தால் சில நாயகிமாரையும் நாயன்மார் வரிசையில் சேர்த்திருப்பாரோ என்று. அத்துணை ஈடுபாட்டோடு அவர்தம் நயத்தக்க திருத்தொண்டைப் பாராட்டி லயித்துப் பாடியிருக்கிறார். இவற்றுக்குச் சிறுத்தொண்டர் புராணம், ஏயர்கோன் கலிக்காம நாயனார், திலகவதியார் (திருநாவுக்கரசர் வரலாறு) வரலாறுகள் சான்று.

நாயன்மார்களாக வரிசைப்படுத்தப்பட்ட பெண்மணிகள் மூவரே. காரைக்கால் அம்மையார், மங்கையர்க்கரசியார் இசை ஞானியார். இதிலே இசைஞானியார் சுந்தரரைப் பெற்றுச் சைவம் விளங்க அளித்தமையாலேயே நாயன்மாராக ஏற்றுக் கொள்ளப்பெற்றவர். மற்ற இருவர் தொண்டும் இறைப்பற்றும் மிக உயர்ந்தவை. அவற்றை மிகத் தெளிவாக நயமுற பாடிச் சொல்கிறார் சேக்கிழார். இவர்கள் தவிர பெரிய புராணத்திலே என்னை மிகக் கவர்ந்த பெண்கள் தொண்டாற் சிறந்தவர்கள் மிகப் பலர்.

திருநீலகண்ட நாயனார் மனைவி , இயற்பகை நாயனார் மனைவி , திருநாவுக்கரசர் தமக்கை திலகவதியார், அப்பூதி அடிகள் மனைவி, ஏயர் கோன் கலிக்காமர் மனைவி, சிறுத்தொண்டர் மனைவி திருவெண்காட்டு நங்கை, சிறுத்தொண்டர் பணிப்பெண் சந்தன

நங்கை, இளையான்குடி மாறநாயனார் மனைவி, திருநீலநக்கர் மனைவி ஆகியோர்.

பெரியபுராணத்தில் காணப்படுகிற பல பெண்மணிகளின் பெயர் கூடத் தெரியவில்லை. நாயகியார் துணை இன்றித் தனித்துத் தொண்டு செய்து, பக்தி செலுத்தி, இறையருளைப் பெற்றவர்கள், இல்லறத்தாரிலே இல்லவே இல்லை. இருந்தும் அவர்கள் பெயர்கள் அறியக் கூட வழியில்லை. வையகம் போற்றும் செய்கை மனை அறம் புரிந்து (திருநீல) தொண்டாற்றிய அடியார்கள் அன்பர்க்கும் அவர்தம் மனைவிமார் - சுற்றத்தார் துணை நின்றிருக்கிறார்கள். தோள் கொடுத்திருக்கிறார்கள். ஏன் நெறிப்படுத்தி இருக்கிறார்கள். திருநீலகண்டரை நெறிப்படுத்தியது அவர்தம் மனைவி. திருநீலநக்கரின் தொண்டைக் காட்டிலும் அவர்தம் மனைவியின் அன்பிலேயே இறைவன் நெகிழ்ந்திருக்கிறான். நாவுக்கரசரை சைவம் தழைக்க அழைத்துவந்தது அவர்தம் தமக்கை திலகவதியார். சிறுத்தொண்டரை விட அவர் மனைவியின் இறை அன்பில் கூர்மை அதிகம்.

இவ்வாறு பல பெண்மணிகளை நாம் பெரிய புராணத்தில் காண்கிறோம். இவர்களைப் பற்றிச் சற்றே விரிவாகச் சிந்தித்துத் தோன்றிய கருத்துக்களை உங்களுடன் பகிர்ந்து கொள்ளலாம் என எண்ணுகிறேன்.

பெரியபுராணத்தில் கூறப்படுகிற வரலாறுகளை மேலோட்டமாகப் படித்தோ கேட்டோ பெண்களை அடியார்கள் தமது சொத்தாக, உடைமைப் பொருளாக மட்டுமே எண்ணினார்கள், தனது இல்லக்கிழத்தியாக நடத்த வில்லை என்று பலர் கேள்வி எழுப்புகிறார்கள். ஐயம் கொள்கிறார்கள். இவற்றிற்குப் பதில் அளித்து ஐயம் தெளிவிப்பதுவும் இந்தப் பரிமாறலின் நோக்கம்.

இயற்பகை, அமர்நீதி, திருநீலநக்கர், கலிக்கம்பர், மானக்கஞ்சாறர் போன்றவர்களின் வரலாறுகள் இத்தகு ஐயங்கட்கு

இடம் தருகின்றன. இவற்றையும் விரிவாக சிந்திக்காலம் என்பதும் இப்பரிமாறலின் நோக்கம்.

பட்டினத்தார் மூன்று நாயன்மாரை ஒருபாட்டில் புகழ்கிறார்.

நாளாறில் கண்ணிடந்து அப்பிய கண்ணப்பர்

வாளால் மகவு அரிந்து ஊட்டிய சிறுத்தொண்டர்

மாது சொன்ன சூளால் இளமை துறந்த திருநீலகண்டர்

இம்மூவரில் கண்ணப்பர் தனி ஆள். மற்ற இருவரும் செயற்கரிய செய்து ஈசன் சோதனைக்கும் ஆளாகி இடர்ப்பட்டுப் பின்னர் இறையன்பைப் பெறப் பெரிதும் காரணம் அவர்தம் மனைவிமார்களே!

# மடாலய நிகழ்வுகள்

## குறள் விழா

கோவிலூர் மடாலயத்தின் சார்பில் நடத்தப் பெற்ற குறள் விழாவின் தொடக்க விழா 30.1.2014 அன்று மாலை 5.00 மணியளவில் நடைபெற்றது. செல்வியர் கவிதா, சித்ரா ஆகியோரின் இறைவணக்கத்துடன் விழாத் தொடங்கியது. காப்பியக் கவிஞர் நா. மீனவன் அனைவரையும் வரவேற்றார். சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் தலைமையுரை வழங்கினார். தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளாரின் சிறப்புரையைத் தொடர்ந்து 4.1.2014 அன்று குறள் விழாவை முன்னிட்டு நடைபெற்ற போட்டிகளில் வெற்றி பெற்றவர்களுக்குப் பரிசுகள் வழங்கப் பெற்றன.

நற்கதை நம்பி டாக்டர். அய்க்கண் வள்ளுவர் அடிச்சுவட்டில் பாரதி என்னும் தலைப்பில் சொற்பொழிவாற்றினார். உயர்திரு. பத்மஸ்ரீ நல்லி குப்புசாமி செட்டி பரிசுகள் வழங்கிப் பாராட்டுரை வழங்கினார். பேராசிரியர் ம. கார்மேகம் நன்றி கூற நாட்டுப் பண்ணுடன் விழா நிறைவுற்றது. விழாவில் உயர்திரு. நல்லி குப்புசாமி அவர்களின் நண்பர்கள் திருவாளர்கள் விஸ்வநாதன், யோகா, பாலநடராஜன், மதன கோபால், மீனாட்சி சுந்தரம் ஆகியோரும்

கல்லூரிப் பேராசிரியர்கள், பள்ளி ஆசிரியைகள், மாணவர்கள், மடாலய அலுவலர்கள் மற்றும் பலர் கலந்து கொண்டனர்.

சம்பந்த மூர்த்தி ஓதுவாரின் இறைவணக்கத்துடன் குறள் விழாவின் இரண்டாம் நாள் (31.1.2014 அன்று) நிகழ்ச்சியாகக் கவியரங்கம் நடைபெற்றது. தொல்காப்பியர் விருது பெற்ற மூதறிஞர் டாக்டர். தமிழண்ணல் அவர்களுக்குப் பாராட்டும் சிறப்பும் செய்யப் பெற்றன. உயர்திரு. மு. கண்ணப்பச் செட்டியார் பொன்னாடை அணிவித்தார்.

அண்ணாமலைப் பல்கலைக்கழக முன்னாள் பதிவாளர் முனைவர் சபாரத்தினம் பாராட்டுரை வழங்கினார். பின்னர் மூதறிஞர் முனைவர். தமிழண்ணல் தலைமையில் கவியரங்கம் நடைபெற்றது.

சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் வரவேற்று ஆசிக் கவிதை வழங்கினார். வள்ளுவர் நோக்கில் என்னும் பொதுத் தலைப்பில் நிகழ்ந்த கவியரங்கில் காசி ஸ்ரீ பொற்கிழிக் கவிஞர் திரு.அரு. சோமசுந்தரம், பொற்கிழிக் கவிஞர் முனைவர் ச.சவகர்லால், செஞ்சொற் கவிஞர் திரு.மரு. பரமகுரு, காப்பியக் கவிஞர் நற்றமிழ் நாவலர் நா. மீனவன், பொற்கிழிக் கவிஞர் செ.சொ. மீ. சுந்தரம் ஆகியோர் பல்வேறு தலைப்புகளில் கவிதை வழங்கினர். பேராசிரியர் ம. கார்மேகம் நன்றிக் கவிதை வாசித்தார். நாட்டுப்பண்ணுடன் நிகழ்ச்சி இனிதே நிறைவுற்றது. கல்லூரிப் பேராசிரியர்கள், பள்ளி ஆசிரியைகள், மாணவர்கள், மடாலய அலுவலர்கள் மற்றும பல இலக்கிய ஆர்வலர்கள் கலந்து கொண்டு சிறப்பித்தனர்.

1.2.2014 மாலை 5.00 மணி அளவில் குறள் விழாவின் மூன்றாம் மற்றும் நிறைவு நாள் நிகழ்ச்சியாகப் பட்டிமன்றம் நிகழ்ந்தது. செல்வியர் கவிதா, சித்ரா இருவரும் இறைவணக்கம் பாடினர். பேராசிரியர் ம. கார்மேகம் அனைவரையும் வரவேற்றார். சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் ஆசியுரை வழங்கினார். முதுபெரும் புலவர் பேராசிரியர் பா. நமசிவாயம் தலைமையில் திருக்குறளின்

பெருமை மிகுதியும் வெளிப்படுவது நல்லதை நாடுவதிலா ? அல்லதைச் சாடுவதிலா ? என்னும் தலைப்பில் பட்டிமன்றம் நிகழ்ந்தது.

நல்லதை நாடுவதில் என்ற அணியில் முனைவர் கரு. முத்தையா (முன்னாள் தமிழ்ப் பேராசிரியர், ஸ்ரீ சேவுகன் அண்ணாமலை கல்லூரி, தேவகோட்டை), முனைவர் நா. வள்ளி (முன்னாள் முதல்வர், இராமசாமி தமிழ்க் கல்லூரி, காரைக்குடி), முனைவர் ச. முருகேசன் (இணைப் பேராசிரியர், அழகப்பா அரசு கலைக் கல்லூரி, காரைக்குடி )ஆகியோரும் அல்லதைச் சாடுவதில் என்ற அணியில் பேராசிரியர் நா. சுப்பிரமணியன் (முன்னாள் தமிழ்ப் பேராசிரியர், இராமசாமி தமிழ்க் கல்லூரி, காரைக்குடி), முனைவர் கே. கண்ணாத்தாள் (இணைப் பேராசிரியர், தமிழ்த்துறை, அழகப்பா அரசு கலைக் கல்லூரி, காரைக்குடி), முனைவர் மா. சிதம்பரம் ( உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை, அழகப்பா அரசு கலைக் கல்லூரி, காரைக்குடி) ஆகியோரும் பேசினர். நல்லதை நாடுவதில் தான் திருக்குறளின் பெருமை மிகுதியும் வெளிப்படுகிறது என்று நடுவர் தீர்ப்பு வழங்கினார்.

காப்பியக் கவிஞர் நா. மீனவன் நன்றி கூற நாட்டுப்பண்ணுடன் நிகழ்ச்சி இனிதே நிறைவுற்றது.

6.02.2014 அன்று திருப்புவனத்தில் அமைந்துள்ள காசிகானந்த சுவாமிகள் மடத்தில் குடமுழுக்கு விழா மிகச் சிறப்பாக நடைபெற்றது. சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் அவர்கள் முன்னிலையில் நடைபெற்ற குடமுழுக்கு விழாவில் ஏராளமான பக்தர்கள் கலந்து கொண்டு சிறப்பித்தார்கள். அன்னதானமும் வழங்கப் பெற்றது.

12.02.2014 அன்று பள்ளத்தூர் முத்து வீரப்ப ஐயா குருபூஜை கோவிலூர் மடாலயத்தில் நடைபெற்றது. அன்பர்கள் பலரும் கலந்து கொண்டு குருவருளும் திருவருளும் பெற்றனர்.

உலக நகரத்தார் முகவரி காசி

செட்டிநாட்டு நகரத்தார் முகவரி கோவிலூர்

கோவிலூரில் துவங்கும் எச்செயலும் நற்செயலாகத்

திகழும் ஆயிரமாயிரம் நகரத்தார் பிள்ளைகளின்

படிப்பிற்கான அமுத சுரபியாம்

கோவிலூரில் இருந்து வெளிவரும்

திருநெல்லை சிறக்க வாழ்த்தும் !



**MJF. அரிமா. மேலை பழநியப்பன்**

(மேலைச்சிவபுரி)

செயலாளர் - திருக்குறள் பேரவை

தமிழிசைச் சங்கம், தமிழ்ச்சங்கம்

72, சீனிவாசபுரம்

கருவூர் - 639 001